**SRI S. M. ANNAMALAI :** கலெக்டருடைய பரிசிலனையில் இருக்கும்போது அந்த நிலத்தில் உள்ள மரங்களை வெட்டி எடுத்துச் செல்கிறார்கள். இதுபற்றி கலெக்டருக்கு தபால் எழுதினேன். அதைத் தடுக்க அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சி என்ன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** கனம் அங்கத்தினர் கலெக்டருக்கு எழுதினால் அங்கிருந்து பதில் கிடைக்கும். எனக்கு எழுதினால் நான் அதைப்பற்றி விசாரித்து தகவல் எழுதுகிறேன்.

*Tirupur Water-supply Scheme*

* 20 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state the present stage of the scheme for the supply of water to Tirupur in Coimbatore district?

THE HON. SRI M. A. MANICKAVELU : Laying of conveying mains from headworks and distribution system in Tiruppur town and construction of the R.C.C. elevated Reservoir and the ground level service reservoir have been completed. The work relating to the construction of headworks and the erection of booster units are in progress. The entire scheme is scheduled to be completed by September 1961.

*Compulsory Education*

*** 21 Q.—SRI P. G. MANICKAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப் பாரா—

(அ) ஆறு வயது முதல் பதினொன்று வயதடைந்த ஆரம்பக் கல்வி கற்க லாயக்கான சிறுவர் சிறுமியர்களுக்குக் கட்டாயக் கல்வி கற்பதற்கான அரசாங்க திட்டமானது எப்போது அமுலுக்குக் கொண்டுவரப்படும் ?

(இ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே வருடந் தோறும் எத்தனை சிறுவர் சிறுமியர்களுக்குக் கட்டாய ஆரம்பப் பயிற்சியளிக்கத் திட்டமிடப்பட்டிருக்கின்றது ?

(உ) இத்திட்டத்திற்காக வருடந்தோறும் எத்தனை ஆசிரி யர்கள் தேவைப்படுவார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ), (இ) & (உ) A statement [a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI :** கட்டாய ஆரம்பக் கல்வி பயிற்சி பெற தகுதி வாய்ந்தவர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்ற புள்ளிவிவரங்கள் சர்க்காரால் சேகரிக்கப்பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** புள்ளிவிவரங்கள் கொடுக் கப்பட்டிருக்கிறது.

---

[a] **Printed as Appendix II on page 131 infra.**

20th January 1961]

SRI K. B. S. MANI: புதிய ஆரம்பக் கல்வி திட்டத்தைக் கொண்டுவர எல்லா கிராமங்களிலும் சிறு குழந்தைகள் நர்சரி ஸ்கூல் ஆரம்பிக்க சர்க்காருக்கு ஏதாவது உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: திட்டம் ஆரம்பக் கல்வியைப்பற்றியது. நர்சரி ஸ்கூல் ஆரம்பிக்க வழி செய்யப்படவில்லை.

SRI T. S. RAMASWAMI: நம்முடைய ராஜ்யத்தில் மூன்றில் ஒரு பகுதியில் இந்தத் திட்டம் நடைமுறையில் அமுலுக்கு வருவதாகச் சொல்லப்படுகிறது. அப்படியானால் எந்தெந்த ஜில்லாக்களில் அமுலுக்கு வரும் என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: சட்டசபை நடவடிக்கைகளைப் பார்த்தால் இதுபற்றிய கேள்வி ஒன்றுக்கு பதில் அளிக்கும் போது விவரங்கள் கொடுக்கப்பட்டிருப்பது தெரியும்.

SRI A. A. RASHEED: What is the percentage of expenditure that will be borne by the Central Government under this scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM: A separate question may be put.

*Use of Tamil in Courts*

* 22 *Q.*—SRI K. R. NALLASIVAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தற்போது நீதி மன்றங்களில் தமிழ் எந்த அளவில் உபயோகிக்கப்படுகிறது?

(இ) தமிழை மேலும் அதிக அளவில் பயன்படுத்த சர்க்கார் இட்டிருக்கும் திட்டம் யாது?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Tamil is being freely used even now in Courts in the mufassal in advancing arguments and in cross-examination of witnesses. Documents in Tamil also can be filed as exhibits.

(இ) There is no such proposal, Sir.

SRI V. SANKARAN: நீதி மன்றங்களில் தமிழிலேயே பேச வேண்டுமென்று ஏற்படுத்திவிட்டால் வக்கீல்களுக்குள்ள மதிப்பும் கிராக்கியும் பெறும் அளவிற்கு பாதிக்கும் என்பதை உணர்ந்து சர்க்கார் அந்த ஏற்பாட்டை நிறுத்திக் கொள்வார்களா?

(பதில் இல்லை.)

*Sugar*

* 23 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Union Government have consulted the State Government regarding the export of sugar; and